# கணேச புஜங்கம்

**ரணத் க்ஷத்3ர க4ண்டா நிநாதா3பி4ராமம்**
**சலத்தாண்ட3 வோத்3 த3ண்ட பத்பத்3ம தாளம் |**
**லஸத் துந்தி3 லாங்கோ3 பரிவ்யாளஹாரம்**
**க3ணாதீ4 சமீசான ஸூநும் தமீடே3 ||** 1

இனிமையாக சப்திக்கும் சிறிய மணிகளின் சப்தத்தால் மகிழ்ச்சியடைபவரும், தாண்டவமாடும் போது நிமிர்ந்ததும் அசைவதுமான திருவடித் தாமரையினால் தாளம் போடுபவரும், உதரத்தின் மீது பிரகாசிக்கும் ஸர்ப்ப ஹாரத்தையுடையவரும், பரமேச்வரனின் புதல்வருமான ஸ்ரீ கணேசரைத் துதிக்கிறேன்.

**த்4வனி த்4வம்ஸ வீணா லயோல்லாஸிவக்த்ரம்**
**ஸ்புரச் சுண்ட3 த3ண்டோ3ல்லஸத்3 பீ3ஜபூரம் |**
**கலத்3 த3ர்ப்ப ஸௌக3ந்த்ய லோலாலி மாலம்**
**க3ணாதீ4ச மீசான ஸூநும் தமீடே3 ||** 2

வீணாகானம் முடிந்த பிறகு மனத்துள் அந்த ரஸத்தை அனுபவித்து லயித் திருப்பதால் பிரகாசிக்கும் முகத்தை உடையவரும், துதிக்கையில் விளங்கும் கொய்யாப்பழத்தை (அல்லது மாதுளம்பழத்தை) யுடையவரும், பெருகும் மத ஜலத்தில் ஆசையினால் சுற்றும் வண்டுகளின் வரிசையையுடையவரும், பரமேச்வரனின் புதல்வருமான ஸ்ரீ கணேசரைத் துதிக்கிறேன்.

**ப்ரகாசஜ் - ஜபாரக்த ரத்னப்ரஸூன**
**ப்ரவாள ப்ரபா4 தாருண ஜ்யோதிரேகம் |**
**ப்ரலம்போ3த3ரம் வக்ர துண்டை3 கத3ந்தம்**
**க3ணாதீ4 ச மீசான ஸூநும் தமீடே3 ||** 3

நன்கு பிரகாசிக்கும் செம்பருத்தி மலர், சிவந்த ரத்னம், சிவந்த புஷ்பம், பவழம், இளம் சூர்யன் இவைகளினது போன்ற காந்தியை யுடையவரும், பருத்த வயிற்றையுடையவரும், வளைந்த துதிக்கை, ஒற்றைத் தந்தம் இவற்றை யுடையவரும், பரமேச்வரனின் புதல்வருமான ஸ்ரீ கணேசரைத் துதிக்கிறேன்.

**விசித்ரஸ்புரத்3 ரத்ன மாலாகிரீடம்**
**கிரீடோல்லஸச் - சந்த்3ர ரேகா2 விபூ4ஷம் |**
**விபூ4 ஷைகபூ4ஷம் - ப4வத்4வம்ஸ ஹேதும்**
**க3ணாதீ4 சமீசான ஸூநும் தமீடே3 ||** 4

பல நிறமுள்ளவைகளும் ப்ரகாசிப்பவைகளுமான ரத்னங்கள் பதித்த ஹாரம், கிரீடம் இவற்றையுடையவரும், கிரீடத்தின் மீது விளங்கும் சந்திரகலை யாகிய ஆபரணத்தையுடையவரும், ஆபரணங்களுக்கெல்லாம் முக்கியமான ஆபரணமாக

விளங்குபவரும், ஸம்ஸார பந்தம் நீங்குவதற்குக் காரணமாக இருப்பவரும், பரமேச்வரனின் புத்ரருமான ஸ்ரீ கணேசரைத் துதிக்கிறேன்.

**உத3ஞ்சத்3 - பு4ஜாவல்லரீ த்3ருச்ய மூலோல்**
**லஸத்3 ப்4ரூலதாவிப்4ரமப்4ராஜ த3க்ஷம் ।**
**மருத்ஸுந்த3ரீ சாமரை: ஸேவ்யமானம்**
**க3ணாதீ4ச மீசானஸூனும் தமீடே3 ॥** 5

உயிரே நிமிர்த்தப்பட்ட கொடி போன்ற அழகிய கைகளையும், ஓரங்களில் அழகாக விளங்கும் புருவங்களின் விலாஸங்களால் சோபிக்கும் கண்களையும் உடையவரும், தேவ ஸ்திரீகளால் வெண்சாமங்களைக் கொண்டு ஸேவிக்கப்படுப்வரும், பரமேச்வரனின் புதல்வருமான ஸ்ரீ கணேசரைத் துதிக்கிறேன்.

**ஸ்புரந்நிஷ்டு2ராலோல பிங்கா3க்ஷிதாரம்**
**க்ருபா கோமளோதா3ர லீலாவதாரம் ।**
**கலா பி3ந்து3க2ம் கீ3யதே யோகி3வர்யை:**
**க3ணாதீ4ச மீசானஸூனும் தமீடே3 ॥** 6

ப்ரகாசிப்பதாயும் கம்பீரமாயும் சஞ்சலமாயும் சிவந்ததாயுமுள்ள கண் பார்வையை யுடையவரும், கருணையினால் அழகியதும் கபடமற்றதுமான லீலைகளோடு கூடிய அவதாரத்தையுடையவரும், சிறந்த யோகிகளால் கலா, பிந்து என்ற ஸ்தானங்களை அடைந்தவராகக் கூறப்படுபவரும், பரமேச்வரனின் புதல்வருமான ஸ்ரீ கணேசரைத் துதிக்கிறேன்.

**யமேகாக்ஷரம் நிர்மலம் நிர்விகல்பம்**
**கு3ணாதீதம் ஆனந்த3ம் ஆகார சூன்யம் ।**
**பரம் பாரம் ஓங்காரம் ஆம்னாய க2ர்ப4ம்**
**வத3ந்தி ப்ரக3ல்ப4ம் புராணம் தமீடே3 ॥** 7

எவரை மஹான்கள் ஒன்றான அழிவற்றதாயும், நிர்மலமான தாயும், பேத மற்றதாயும், குணங்களுக்கு அப்பாற்பட்டதாயும் (நிர்க்குண மாயும்), ஆனந்த ஸ்வரூபமாயும், உருவமற்றதாயும், எல்லாவற்றிற்கும் மேலானதாயும், ஓங்கார (ப்ரணவ) ஸ்வரூபமாயும், வேதங்களின் உட்பொருளாயும், சுலபமாக அறிய முடியாததாயும், அனாதியாயும் கூறுகின்றனரோ அத்தகைய கணேசரைத் துதிக்கிறேன்.

**சிதா3னந்த ஸாந்த்3ராய சாந்தாய துப்4யம்**
**நமோ விச்வகர்த்ரே ச ஹர்த்ரே ச துப்4யம் ।**
**நமோ (அ)னந்த லீலாய கைவல்ய பா4ஸே**
**நமோ விச்வபீ3ஜ ப்ரஸீதே2 சஸூனோ ॥** 8

பரிபூரண ஞான ஆனந்த ஸ்வரூபியும், சாந்தன்வாபியம், உலகைப் படைப்பவரும் அழிப்பவருமான தங்களுக்கு நமஸ்காரம். உலகிற்குக் காரணமாக விளங்கும் ஹே ஈச புதரா ! எல்லையற்ற லீலைகளைப் புரிகின்ற ஒளி வடிவமான கைவல்ய நிலையிலுள்ள தங்களுக்கு நமஸ்காரம். தாங்கள் அருள்புரிய வேண்டும்.

**இமம் ஸுஸ்தவம் ப்ராதருத்தா2ய ப4க்த்யா**
**படே2த்3யஸ்து மர்த்யோ லபே4த்ஸர்வகாமான் ।**
**க3ணேசப்ரஸாதே3ன ஸித்4யந்தி வாசோ**
**க2ணேசே விபௌ3 துர்லப4ம் கிம் ப்ரஸன்னே ॥** 9

எந்த மனிதன் அழகிய இந்த ஸ்தோத்ரத்தைக் காலையில் எழுந்து பக்தியுடன் படிக்கிறானோ, அவன் எல்லா விருப்பங்களையும் அடைவான். ஶ்ரீ கணேசரின் அருளால் அவனது சொல் பயனளிக்கக் கூடியதாகும். ஸர்வ வ்யாபியான ஶ்ரீ மஹாகணபதி ஸந்தோஷமடைந்தால் எதைத்தான் அடைய முடியாது! (எல்லாவற்றையும் பெறலாம்.)

---

